Regd. No. 2970

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்

ஆசிரியர்: P.B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
*Mahamahimopadhyaya:*
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503

வருடச் சந்தா ரூ. 10

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



பேரருளாளர் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

துந்துபி வருஷம் 1982

# ஸ்ரீராமாநுஜன்-405







ஆசிரியர்:
ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 35 } துந்துபி ஸ்ரீ ஆனி மீ 1982 { பகுதி 3


யதிராஜதாஸரின் கட்டுரைகள்

## கம்பர் காலத்தைப்பற்றின ஆராய்ச்சி



கம்பர்பெருமான் வாழ்ந்தது ஸ்ரீமந்நாதமுனிகளின் காலத்திலென்று சிலருடையவோ பலருடையவோ கருத்தாகக் காண்கிறது. அவர் கூரத்தாழ்வான் திருக்குமாரரான ஸ்ரீபராசரபட்டருடைய காலத்தில் வாழ்ந்ததோடு அவருடைய காலக்ஷேபகோஷ்டியிலும் அந்வயித்திருந்து அர்த்தவிசேஷங்கள் கேட்டவர் என்னும் உண்மையை அவர் தாமியற்றிய சடகோபரந்தாதி கொண்டும் (கம்ப) ராமாயணங் கொண்டும் மூதலிக்கின்றேமிங்கு. சிலவாண்டுகட்கு முன்பு, பெருந்தமிழர்கள் நிரம்பிய கூட்டங்களில் இவ்

விஷயத்தையுபந்யஸித்துப் பலர் ஆமோதிக்கவும் பெற்றிருக்கிறோம் இங்குச் சுருக்கமாக வரைகின்றோம். முந்துறமுன்னம் சடகோபரந்தாதி யினின்று கேண்மின்.

''அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்தஅரும் பொருளைச்
செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும்
தந்தம்விழாவு மழகுமென்னும்? தமிழார் கவியின்
பந்தம் விழாவொழுகுங் குருகூர்வந்த பண்ணவனே''

என்பது அதில் ஒரு செய்யுள்.

இதனால் நாம் தெரிந்துகொள்வது என்னவென்றால், கம்பர் காலத்தில் விஷ்ணுவாலயங்களில் திவ்யப்ரபந்த கோஷ்டிகள் மிகச் சிறப் பாக விளங்கினதாய்த்தெரியவருகிறது. ஆழ்வார் திவ்வியப்பிரபந்தங்கள் அருளிச்செய்யாவிடில் விஷ்ணுவாலயங்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் அழகிழந்து கிடக்கவன்றோநேரும்—என்று அநுபவரஸிகராய் இதயம் பொங்கிப்பேசினபடி. ஸ்ரீமந்நாதமுனிகள் தமது காலத்தையெல்லாம் திவ்யப்ரபந்த ஆர்ஜனத்தில் செலவிட்டாரேயன்றி இக்காலத்திற்போல் அவற்றைப்பிரசாரம் செய்யப்பாடுபட்டிலர். மேலையகத்தாழ்வார், கீழை யகத்தாழ்வாரென்னும் தமதுபாகிநேயர்களிருவர்க்குத்தாம்பெற்ற திவ்ய ப்ரபந்தங்களை உபதேசித்தருளி,அவர்கள் முகமாக தேவகானத்தில் ஸன் னிதி களினுள்ளே ஸேவிக்கும்படி செய்தருளினவத்தனையே. ''அரையர் ஸேவை''என்று இற்றைக்கும் வழங்கும் ப்ரக்ரியைதான்எம்பெருமானார் காலம் வரையில் நிகழ்ந்துவந்தது, எம்பெருமானார் காலத்தில்தான் திருவீதிகளில் கோஷ்டியாக ஸேவிப்பதென்பது தொடக்கமாயிற்று ஆகவேதான் எம்பெருமானார்வாழிதிருநாமத்தில் ''மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே'' என்று அநுஸந்திக்கப்பட்டு வரு கிறது அந்த வாழிதிருநாமம் ஆர்த்திப்பிரபந்தத்தில் பொய்யிலாத மணவாள மாமுனிகளருளிச்செய்தது ''ஸர்வதேச தசாகாலேஷு அவ் யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞாவர்த்ததாம் அபிவர்த்த தாம்'' என்பதனை ஸ்ரீபாஷ்யாதி காலக்ஷேபங்களில் அநுஸந்திப்பா ரில்லை; எங்கும் திவ்யப்ரபந்த சாற்றுமுறைகளில் அநுஸந்திப்பதைக் கண்டால் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப்ரபந்த கோஷ்டீ நியமநப்ரயுக்தம் என்பது தெள்ளென விளங்கும். இது தவிர வும், இயல்சாற்று ஸேவிக்கும்போது;

"நன்றுந் திருவுடையோம் நானிலத்தி லெவ்வுயிர்க்கும்
ஒன்றுங் குறையில்லை ஓதினோம் — குன்றம்
எடுத்தானடி சேர் இராமாநுசன் தாள்
பிடித்தார் பிடித்தாரைப் பெற்று."

"வாழியரோ தென்குருகை வாழியரோ தென்புதுவை
வாழியரோ தென்குறையல் மாநகரம் – வாழியரோ
தக்கோர் பரவும் தடஞ்சூழ் பெரும்பூதூர்
முக்கோல் பிடித்த முனி" என்னும்

இந்த இரு வெண்பாக்களை உலகமெங்கும் அநுஸந்தித்து வருவது ஆராயப்படின் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞை இன்னதென்பது நன்கு விளங்கியே தீரும். ஆக ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்தில் மேலே உதாஹரித்த சடகோபரந்தாதிப் பாசுரம் அவதரித்ததென்பதற்கு ப்ரஸக்திலேசமுமில்லை யென்பதை உணரலாம்.

இனி, கம்பராமாயணத்திலிருந்தும் சில சான்றுகள் காட்டுகின்றோம்; —

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில், மாருதியை (சிறிய) திருவடியென்றும், கருத்மானைப் பெரிய திருவடியென்றும், ஜடாயுமஹாராஜரைப் பெரிய வுடையாரென்றும் இங்ஙனே பலபல வ்யபதேசங்கள் நிகழ்ந்து வருவது ப்ரஸித்தம் சிறிய திருவடியை [அநுமனை] ப்பெரும்பாலும் திருவடியென்றேவழங்குவர். இத்தகைய வியபதேசங்கள் எம்பெருமானார் காலத்திற்குமுன்னே கிடையவேகிடையாதென்று திண்ணமாகக் கூறலாம். எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் காலத்தில்தான் இவை ஸுபிக்ஷம் பெற்றன. இதைச் சிறுவிஷயமாகக் கொள்ளலாகாது.

மேலே கேண்மின்; கம்பராமாயணம் கிட்கிந்தாகாண்ட முடிவில் மாருதி கடல்தாவப் புறப்பட்டபடியைக் கம்பர் கூறும் செய்யுள் கேளீர்;-

"பொருவருவேலைதாவும் புந்தியான்" என்னுஞ் செய்யுளில்— ஈற்றடி "திருவடியென்னுந் தன்மை யாவர்க்கும் தெரியநின்றான்" என்றுள்ளது இதை நாம் விவரிக்கவேணுமோ? மாருதிக்குத் திருவடி யென்னுந் திருநாமம் வழங்கிவந்தது இங்கு ஸ்பஷ்டமாகப் பொறிக்கப்பட்டதாயிற்று. ஸ்ரீமந் நாதமுனிகளின் காலத்தில் மாருதிக்கு இங்ஙனே வ்யபதேசமிருந்ததென்று காட்ட முடியுமோ?

இவ்விஷயத்தை நாம் சென்னைமாநகரில் உயர்நீதிபதியொருவர் தலைமைதாங்கி நடத்தின மிக்க பெருஞ்சபைநடுவே உபந்யஸித்தபோது சொற்பொழிவு முடிவதற்குமுன்னே தாம் எழுந்து "அன்பர்கள் கவனிக்கவேணும்" என்று பீடிகையிட்டுக் கூறியதாவது –

"கம்பநாடர் இராமானுசர் காலத்திற்குப் பிற்பட்டவர் - என்பதற்குக் காட்டிவரும் சான்றுகளில் கீழ்ச்சொன்னவைகளும் மேலே சொல்லப்புகுமவையும் கிடக்க, இவ்விஷயம் மிகச் சிறந்ததென்றும், பிடிவாதமுடையவர்களும் இதை மறுக்க முடியாதென்றும் நான் கருதுகின்றேன்" என்று பலபலவுஞ் சொல்லி நிறுத்தினர். இச்சபையில் பேசுவதற்கென்றே காரைக்குடியில்நின்றும் வந்திருந்தவொரு தமிழ்ப் பேராசிரியர் மேலே உயர்நீதிபதியவர்கள் கூறியதை அடியொற்றிச் சில பேசிச்சென்றார்.

நாம் மேலே ஒரு விஷயம்மட்டும் சொல்லி முடித்தோம் (அதாவது) – அடைக்கலம்புதந்த ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரித்தருளும் சக்ரவர்த்தி திருமகனுடைய பாசுரமாகக் கம்பர் கூறின செய்யுள் –

"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது இயம்பினீர் என்பால்வைத்த
காதலால், இனிவேறெண்ணக் கடவதென்? கதிரோன்மைந்த!
கோதிலாதவனை நீயேயென் வயிற்கொணர்தி யென்றான்."

என்பதாம். இங்கு ஓர் இதிஹாஸம் குறிக்கொள்ளத்தக்கது; எம்பெருமானரைச் சிலர் கேட்டார்களாம் — "விபீஷணாழ்வானை ஸுக்ரீவாதிகள் ஸ்ரீராமகோஷ்டியில் புகுரவிடோமென்கிறார்கள்; இராமபிரான் விபீஷணாழ்வானைக் கைவிடமாட்டேன் [×ந த்யஜேயம் கதஞ்சந×] என்கிறார்; இருவருடையவும் கருத்து யாதுகொல்?" என்று அதற்கு எம்பெருமானர் விடையளித்தபடி; — "இருவரும் சரணாகதரக்ஷணம் பண்ணப்பார்க்கிறார்கள்" என்று. விபீஷணாழ்வான் ×ராகவம் சரணம் கத:× ஆகையாலே அவன்பால் பரிவு உண்டாகி அவனை ரக்ஷிக்கப்பார்த்தபடி ×ஸுக்ரீவம் சரணம் கத:× என்றபடி பெருமாள் ஸுக்ரீவனை சரணாகதி பண்ணினபடியால் அந்தப்பெருமாள் மீது பரிவுண்டாகி விபீஷணனால் பெருமாளுக்கு என்ன தீங்கு வருமோ? என்றதிசங்கித்து அவனைத் தடை செய்கிறபடி என்பதாம். இவ்வர்த்தவிசேஷம் பட்டர் கோஷ்டியில் சிறப்பாக

உபந்யஸிக்கப்பட, அதைக்கேட்டிருந்த கம்பர் ''இயம்பினீர் என்பால் வைத்த காதலால்'' என்றார். இது வான்மீகத்தில் எங்குங்கண்டதன்று இத்தகைய விசேஷார்த்தங்கள் கம்பராமாயணத்தில் காண்பதனாலும் கம்பர் ஸ்ரீமந்நாதமுனிகளின் காலத்தவரல்லர், பட்டர் காலத்தவரே யென்று அறுதியிடத்தட்டில்லை யென்று பேசித் தலைக்கட்டினோம். ஸபையார் ஏகமுகமாகக் கரகோஷத்தினால் ஆமோதித்தார்கள். ※

# சாரீரக மீமாம்ஸையில் ஓர் ஆராய்ச்சி

ஜகத்காரண வஸ்துவாதிகளான வேதாந்த வாக்யங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்திலேதான் பர்யவஸிக்கின்றன என்று ஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்பதை நன்கு நிரூபித்துக் காட்டுகிறோம் ×அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா× என்று பாஹ்ம விசாரத்தை ப்ரஸ்தாவித்து ×ஜந்மாத்யஸ்ய யத:× என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, 'எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்மஸ்திதி லயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று ப்ரஹ்மலக்ஷணம் காட்டினார் வியாஸர் வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பர விருந்தங்கள்போல் தோன்ற நின்றன என்பது பிரஸித்தமான விஷயம் ஏதோ ஒரு வஸ்துதான் ஜகத் காரணமாக இருக்கமுடியுமே ஒழியப் பலவஸ்துக்கள் அப்படியிருக்க முடியாதென்கிற நிச்சயம் ஆவச்யகமானது பரஸ்பர விருத்தங்கள்போல் தோன்ற நின்ற காரண வாக்யங்களாலே இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக்கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தே யிருக்கிறார். எப்படி பரிஹரித்திருக்கிறாரென்றால் —

ஸகல காரணவாக்யங்களுக்கும் ஒற்றுமையைக்காட்டிப் பரிஹரித்திருக்கிறார் ஸாகாங்க்ஷ வாக்யங்களுக்கு நிராகாங்க்ஷ வாக்யங்களில் பர்யவஸானம் நியாய்யமென்பது யாவருமிசைந்ததொன்றும் இதையே நெஞ்சில் கொண்ட வ்யாஸ மஹர்ஷியானவர் ஈக்ஷத்யதிகரணம் முதலானவற்றால் காரண வாக்யங்கள் எல்லாவற்றிற்கும் புருஷஸூக்தப்ரதிபாத்யனான நாராயணனிடத்தில் பர்யவஸாநத்தைக் காட்டியுள்ளார். இது தன்னை இங்கு விளக்கமாக உபபாதிக்கிறோம்.

2

ஜகத்காரண வஸ்துவை ப்ரஸ்தாவிக்கின்ற காரண வாக்யங்களை ஸாகாங்க்ஷ வாக்யங்களென்றும் நிராகாங்க்ஷ வாக்யங்களென்றும் இருவகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது முதற் காரியம் ஸாகாங்க்ஷ வாக்யங்களென்பவைதாமும் இருவகையாயிருக்கும் 1. ஸாமான்ய சப்தத்தோடு கூடியிருந்து விசேஷ ப்ரதிபத்தியை அபேக்ஷித்திருக்குமவை. 2. அநுவாத ரூபமாய்க்கொண்டு புரோவாதத்தை அபேக்ஷித்திருக்குமவை என்று ×ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்×, ×ஸேயம் தேவதைக்ஷத× இத்யாதி வாக்யங்களில் 'ஸத்' என்றும் 'தேவதா' என்றும் ஸாமான்ய சப்தங்களே யிருக்கையாலே இவை விசேஷ ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷங்களென்பது ஸ்பஷ்டம். ×யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே× இத்யாதி வாக்யங்கள் யச் சப்த கடிதங்களாயிருப்பதுபற்றி அநுவாத ரூபங்களாகையாலே புரோவாத ஸாகாங்க்ஷங்களென்பதும் ஸ்பஷ்டம் ஸாகாங்க்ஷ வாக்யங்களில் கீழ்ச் சொன்ன இரண்டு வகைகளைத் தவிர மூன்ருவது வகையும் ஒன்று உண்டு அயோக்யமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்யங்கள் யோக்யார்த்த ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷமாயிருப்பதே அது, ப்ரதர்தநவித்யையில் ×மாமுபாஸ்வ ஏத தேவாஹம் மநுஷ்யாய ஹிததமம் மந்யே× என்று இந்திரன் சொன்ன வாக்யம் போன்றவை இந்த வகுப்பில் சேரக்கடவன ஆக மூவகுப்பாகப் பிரியலுற்ற ஸாகாங்க்ஷங்களான காரண வாக்யங்கள் வஸ்து விசேஷத்தை நிர்ணயிப்பதில் ஸ்வதந்திரமாக அசக்தங்களாகையாலே நிராகாங்க்ஷங்களான வாக்ய விசேஷங்களைக் கொண்டே வஸ்து விசேஷத்தை நிர்ணயிக்க வேண்டியதாகிறது யோக்யார்த்த விசேஷ ப்ரதிபாதகங்களாய்க்கொண்டு இதர வாக்யங்களை எதிர்பாராதவையான வாக்யங்களே நிராகாங்க்ஷ வாக்யங்களென்று தேறிற்று

×ஏகோ ஹ வை நாராயண ஆஸித் ந ப்ரஹ்மா நேசாந:× இத்யாதி வாக்யங்களே அப்படிப்பட்டவை என்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். மேலே காட்டிய வாக்ய விசேஷத்தில் ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருக்கவில்லை அநுவாத ரூபத்வமுமில்லை; அயோக்யார்த்த ப்ரதிபாதநமுமில்லை. ஸத் ப்ரஹ்ம ஆத்ம தேவதா இத்யாதிகளான பதங்களிருந்தாலன்றோ ஸாமான்ய சப்தம் சேர்ந்திருப்பதாக ஆகும்.

அவை இல்லையே; யச்சப்த கடிதமாயிருந்தாலன்றோ அநுவாத ரூபமாக ஆகும் அதுவுமில்லையே; அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வ மில்லாமை யோடுகூடின யோக்யார்த்த ப்ரதிபாதகத்வமேயுள்ளதென்பது நிரூபிக்கப் படவேண்டியதாகையாலே அது நிரூபிக்கப்படுகிறது அடுத்தபடியாக.

சாரீரக மீமாம்ஸையில் சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநார்த்தமான சதுஸ் ஸூத்ரி முடிந்ததும் ஐந்தாவது அதிகரணம் ஈக்ஷத்யதிகரணம். இதில் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்க ஸூத்ரங்கள் இரண்டு; ×தந் நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் × கதிஸாமாந்யாத்× என்னுமிவை. ஸாதாரணமான ஸச்சப்தத்தையும் தேவதா சப்தத்தையும் கொண்டிருக் கிற ஸத்வித்யையானது புருஷஸூக்த ப்ரதிபந்நனை ஸ்ரீமன் நாராய ணன் பக்கலிலே பர்யவஸிப்பதாக இவ்விரண்டு ஸூத்ரங்களாலும் காட் டப்படுகிறது ''தந்நிஷ்டஸ்யமோக்ஷோபதேசாத் என்கிற ஸூத்ரத்தின் பொருளை முன்னம் தெரிந்துகொள்ளவேணும். 'தந்நிஷ்டஸ்ய' என்கிற விடத்துள்ளதான தச்சப்தத்தினால் — ஸூத்ரகாரர் கருதிய விஷய வாக்யத்திலுள்ள ஸச்சப்தவாச்யமான வஸ்து கொள்ளப்படுகிறது. ஆகவே, ஸத்தை உபாஸிப்பவனுக்கு என்பதாகப் பொருள் தேறிற்று. ஸத்தை உபாஸிப்பவனுக்கு முக்தி கிடைப்பதாக ஓதப்படுவதால் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமானவஸ்து ப்ரதானமாக மாட்டாது என்றதாக ஸூத்ரார்த்தம் தேறும். ''ப்ரதாநந்தான் ஜகத் காரணம்'' என்பவர் களை நிரஸிப்பதன்றோ ப்ரஸ்துதம் புருஷஸூக்தத்திலும் உத்தர நாரா யணத்திலும் ''தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா அய நாய வித்யதே'' என்றும், ''நாந்ய: பந்தா வித்யதே அயநாய'' என் றும் மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்காகுந்தன்மை நாராயணனுக்கே ஓதப்பட்டுள்ளது. இந்த ஸத் வித்யா ப்ரகரணத்திலும் [அதாவது சாந்தோக்யத்தில்] ''ஆசார்யவாந் புருஷோவேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந்த விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே'' என்று ஸது பாஸனமே மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்டது. இந்த ச்ருதி வாக் யத்தின் பொருளாவது, எவனுக்கு உபதேஷ்டாவான ஆசார்யன் இருக் கிறானோ அவனே ப்ரஹ்ம வித்தாவான் சரம சரீரத்திலிருந்து விடுபடு மளவே அவனுக்குக் காலதாமதம்; சரம சரீரம் விழுந்தவுடவே ஸத்சப்த நிர்திஷ்டனாய் ஜகத்காரணபூதனான பரம புருஷனை அடைகின்றான் ஸதுபாஸன நிஷ்டனுக்கு சரீரம் விழுமளவுதான் மோக்ஷப்ராப்தியில்

தாமதம், சரீரம் தொலைந்தவுடனே முக்தனாகிறான் — என்பதாம். இதனால் நாராயணனே ஸச்சப்த வாச்யனென்று அறுதியிடப்படுவதனால் ப்ரக்ருதமான ஸத்து ப்ரதானமன்று என்றதாக ஸூத்ர தாத்பர்யம் தேறுகிறது. "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி" இத்யாதிகளான உதாஹ்ருத வாக்கியங்களாலே நாராயணோபாஸநந்தான் மோக்ஷோபாய மென்று நிச்சயிக்கப்பட்டவளவில் 'தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்'' என்று ஸூத்ர மியற்றின மஹர்ஷியானவர் நாராயணோபாஸகனையே விவக்ஷித்தாராகிறார் என்று நிர்ணயிப்பதில் தட்டுண்டோ?

கீழே நாம் விவரித்த விஷயத்தில் பிறர் சொல்லக்கூடியது ஒன்றுண்டு; அதாவது, தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசமாகிற ஹேதுவைக் கொண்டு ப்ரதாநம் ஜகத்காரணமன்று என்று நிரஸிப்பது மட்டுமே இங்கு ஸூத்ரகாரருக்கு உத்தேச்யமானது; நாராயணனே ஜகத்காரணபூதனென்று ஸ்தாபிப்பதில் இந்த நோக்கே கிடையாது சப்தத்தினால் கிடைப்பதற்கு மேற்படக் கொள்ளத்தகாது — என்று.

(தொடரும்)

## குறிக்கொள்ளத்தக்கவை

✳ திருமலைதிருப்பதி ஸந்நிதிகளில் கைங்கர்யத்துக்கு திவ்யப்ரபந்த அத்யாபக ஸ்வாமிகள் நால்வர் தேவை. இடவசதியும் போஜனவசதியும் மாதமொன்றுக்கு 400 ரூபாய் வேதனமும் அளிக்கப்படும். மூவாயிர அத்யாபகர்களானால் 300 ரூபாய்களும், இயற்பா திருவாய்மொழி அத்யாபகர்களானால் 200 ரூபாய்களும் மேற்படி வசதியுடன் அளிக்கப்படும். அதிகாரிகள் திருமலை திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமிகளுக்கு விண்ணப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள் ✳

## ஸ்ரீமத்பரமஹம்ஸ வானமாமலை ஜீயர் ஸ்வாமிகளின் யாத்திரை

ஆந்திரதேச யாத்திரையாக எழுந்தருளாநின்ற ஸ்ரீமத் வானமாமலை ஸ்வாமிகள் சேலம் கோயம்புத்தூரில் நின்றும் நெல்லூர் எழுந்தருளி அங்கிருந்து ஹைதராபாத் எழுந்தருளியாயிற்று. அவ்விடத்தில் சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் நடந்தேறும். ... ... ✳

# ஆசார்ய ஹ்ருதயத்தின் பெருமை.

(பத்ராதிபர்.)

ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ள நூல்களுள் ஆசார்ய ஹ்ருதயம் என்பது மொன்று. நம்மாழ்வாரருளிச்செய்த **திருவாய்மொழிக்கு** "தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப் பொருளை நன்குரைத்தது, ஈடுமுப்பத்தாறுயிரம்" என்று **உபதேசரத்தின** மாலையில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடி மிகச்சிறந்த வியாக்கியானமாகிய [ பகவத்விஷயமென வழங்கப்படுகிற ] ஈடு முப்பத்தாறுயிரப்படியை அருளிச்செய்தவரான **வடக்குத்திருவீதிப்பிள்ளை** யென்னுமாசிரியர்க்கு இரண்டு திருக்குமாரர்கள் தோன்றியிருந்தனர். அவர்களுள் மூத்தவர் **பிள்ளைலோகாசார்ய** ரென்று உலகம் போற்ற நின்ற ஆசிரியராவர். இளைய திருக்குமாரர் **அழகிய மணவாளப்பெருமாள் நாயனர்** என்னுமாசிரியர். இவ்விருவரும் இவ்வுலகுக்குச் செய்தருளிய பேருதவி கைம்மாறிலாதது. ஸ்ரீவசநபூஷணம், முமுக்ஷுப்படி (திருமந்த்ரார்த்தம்) முதலிய அஷ்டாதச (18) ரஹஸ்ய திவ்யக்ரந்தங்களையருளிச்செய்தவர் மூத்தவரான பிள்ளைலோகாசார்யர். அவருடைய திருத்தம்பியாரான அழகியமணவாளப்பெருமாள் நாயனர் என்னுமிவர் அருளிச்செய்தவை— திருப்பாவைக்கு ஆறுயிரப்படி வியாக்கியானம், அமலனுதிபிரான் வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், பட்டோலையென்பதோர் ரஹஸ்யம், அருளிச்செயல் ரஹஸ்யம், **ஆசார்யஹ்ருதயம்** முதலியன.

இவற்றுள் ஆசார்யஹ்ருதய மென்னும் நூலின் பெருமையைப் பேசவே நாமிப்போது முன்வருகிறோம். இவ்வரிய பெரிய நூலின் பெயரைக் கேள்விப்படாதவர்கள் பலர் இருக்கலாம். கேள்விப்பட்டவர்களிலும் பலர் "**ஸ்ரீவசனபூஷணம்** முதலிய மற்ற நூல்களைப்போல் இதுவுமொருநூல்" என்று இவ்வளவே க்ரஹித்திருக்கக்கூடும். நூலினுள் இறங்கி ஆராய்ச்சிசெய்திரார்கள். இந்நூலில் பரிசயமுள்ளவர்களும் பெரும்பாலர் இதன் அருமை பெருமைகளை ஆழ்ந்து அறியப்பெற்றிலர் என்றால், இப்பேச்சில் யாரும் குறைகூற நேராது. "மற்றநூல்களைப் போலல்லாமல் இதுவொரு விலக்ஷணமான நூல்; மிகச்சிறந்த நூல்" என்று இவ்வளவு க்ரஹித்திருப்பவர்கள் சிலருளர். அந்தச் சிறப்பு எப்படிப் பட்டதென்பதை உலகமெல்லாமறிய நன்குவிளக்கிக் காட்டவேணு மென்னுமாசை நமக்கு எழுந்துளது.

இவ்வுலகில் அன்றுதொட்டு இன்றறுதியாகத் தோன்றியுள்ள திவ்விய நூல்களில் ஆசார்யஹ்ருதயத்திற்கொப்பானதொரு க்ரந்தம் இதுவரையில் தோன்றவுமில்லை, இனித்தோன்றப்போகிறதுமில்லை. உபநிஷத்துக்கள், இதிஹாஸபுராணங்கள், ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் எல்லாம் ஒருங்கே திரண்டு இந்நூலாக வடிவெடுத்திருக்கின்றதென்பது உண்மையுரை.

**ஆசார்யஹ்ருதயம்** என்கிற சொல்லானது 'ஆசார்யருடைய திருவுள்ளம்' என்னும் பொருள்பெற்றுள்ளது. வைதிக ஸந்தானத்திற்கு ப்ரதம ஆசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக்கருத்துகளைத் தெளிய வெளியிடுகையாலே, இந்நூலுக்கு ஆசார்யஹ்ருதயமென்று பெயராயிற்று என்பர் பெரியோர். நம்மாழ்வாரென்கிற ஒரு ஆசார்யருடைய திருவுள்ளத்தை மாத்திரம் வெளியிடாமல் ஸகல பூர்வாசார்யர்களுடையவும் திருவுள்ளக்கருத்துகளை யெடுத்துரைப்பது இந்நூலாதலால் "ஆசார்யர்களின் ஹ்ருதயம்" என்கிற பொருளும் பொருந்தும்.

இந் நூலின் அர்த்தங்கள் மிகவும் அதிசயிக்கத் தக்கவை யென்பது ஒரு புறமிருக்க, அர்த்தத்திற் காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனி தாயிருக்குமென்பது, இதில் ஸவல்ப பரிசயம் பண்ணினவர்களுக்கும் எளிதாகத் தெரியவரும். ஃ செவிக் கினிய செஞ்சொல் ஃ என்று திருவாய்மொழிக்கு ப்ரஸித் தியிருந்தாலும் உண்மையாகச் செவிக்கினிய செஞ்சொல் இந் நூலொன்றே யாகும். இந் நூலின் அரிய பெரிய பொருள்களை உள்ளவாறு உணரப்பெறு வதும் நெஞ்சில் தரிக்க வைத்துக்கொள்வதும் எப்படிப்பட்ட மாஞானியர்க்கும் எளிதன்று. நாடோறும் இதில் மூலத்திலும் வியாக்கியானத்திலும் அவகாஹித் துக்கொண்டே யிருப்பார்க்கும் இதன் ஆழ்பொருள்கள் அறியவரியனவே.

இந் நூலில் ஒவ்வொரு சொல்லும் பெரும்பாலும் பிரமாணவசனத் தொகுதியேயாகும். ஆசிரியர் தம்முடைய சொந்த வாக்காக எழுதும் வார்த்தை கள் மிகச் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வார்த்தைகள் வடமொழி மேற்கோள்களும் தென்மொழி மேற்கோள்களும் வடிவெடுத்தவை. இங்ஙனே நாம் எழுதிவிடுவதனால் பயனில்லை. விளங்கக் காட்டி வாசகர்களுக்குப் பேரின்ப மளிக்கின்றோம்.

இந் நூலில் ஒவ்வொரு மஹாவாக்யமும் சூர்ணை யெனப்படுகின்றது. முதல் சூர்ணை யொன்றைமாத்திரம் எடுத்துக்கொண்டு அது அமைந்திருக்கும் அழகை விவரித்துக்காட்டுகின்றோம்.

*"காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர்விளக் கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேதவிளக் கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினா லருள்செய்தான்"*

இது இந் நூலின் முதல் சூர்ணை. இதில் நூலாசிரியருடைய சொந்தமான சொல் ஒன்றுகூட இல்லை. சொல் தொடை மாத்திரமே இவருடையது. சொற்கள் யாவும் பூருவர்களின் திவ்ய ஸூக்திகளிலிருந்து அற்புதமாகத் திரட்டப் பட்டுள்ளது.

1. பட்டரென்கிற ஆசிரியருடைய வடமொழி ச்லோகமொன்று; 2. திருமாலைப் பாசுர மொன்று; 3. பேயாழ்வார் பாசுர மொன்று; 4. பூதத்தாழ்வார் பாசுர மொன்று; 5. திருமங்கையாழ்வார் பாசுரங்கள் ஐந்து; 6. பெரியாழ்வார் பாசுர மிரண்டு; 7. நம்மாழ்வார் பாசுர மிரண்டு 8. திருமழிசை யாழ்வார் பாசுர மொன்று. ஆக இவ்வளவு திவ்ய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு இந்த வொரு சூர்ணை நிருமிக் கப்பட்டுள்ளது. இதில் அடங்கியுள்ள அந்த ஸ்ரீஸூக்திகளை விவரித்துக் காட்டுகிறோம் காண்மின்;

1. *ஹர்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* இது பட்டருடைய திருவாக்கு.

2. * அறிவிலாமனிசர் * இது திருமாலைப் பாசுரம்.

3 * உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி * இது பேயாழ்வார் பாசுரம்.

4. * ஞானச் சுடர்விளக் கேற்றினேன் * இது பூதத்தாழ்வார் பாசுரம்.

5. * பிறங்கிருள் நிறங்கெட * * நந்தா விளக்கே * * மறையாய் விரிந்த விளக்கை* * வந்து பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம் பரிமுக மாயருளிய * * கலைகளும் வேதமும் நீதிநூலும் * இவை திருமங்கை யாழ்வார் பாசுரங்கள்.

6. பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க * * வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு * இவை பெரியாழ்வார்பாசுரங்கள்.

7. * இவையன்றே நல்ல இவையன்றே தீய * * மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினைக் கண்டு * இவை நம்மாழ்வார் பாசுரங்கள்.

8. * துளக்கமில் விளக்கமாய் * இது திருமழிசையாழ்வார் பாசுரம்.

ஆக, இத்தனை பாசுரங்களிலுள்ள சொற்களை, தாம் கூற விரும்பிய பொருளுக்குத் தக்கவாறு கண்டங்களாக வெடுத்துத்திரட்டி ஒரு சூர்ணையமைத்துள்ள அதிசயம் என்னே!

இந்த சூர்ணையில் இவ்வாசிரியர் வெளியிட விரும்பிய விஷயம் யாதெனில், சிறிதும் விடாமல் அதை நம்முடைய வாக்யமாக எழுதிக் காட்டுகிறோம்;

> அறிவிலிகள், ஞானவிளக்கையேற்றி நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று எம்பெருமானாகிற விளக்கைக்கண்டு நன்று தீதுகளைப் பகுத்துணருகைக்காக, அகாரமாகிற விளக்கில் கொளுத்தின சாஸ்த்ரங்களாகிற விளக்கைப் பேரருளாளப்பெருமான் அருள் செய்தான்.

என்கிற விதுவே முதல் சூர்ணையின் விஷயம். இதைத் தம்திருவாக்கால் அமைத்தருளாமல் முன்னோர்களது மொழிகளைக்கொண்டே வெகு அழகாக வெளியிட்டுள்ளார். 'பகவான் பரமகருணையாலே சாஸ்த்ரங்களை உபகரித்தான்' என்கிற விஷயத்தைத் திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், பட்டர் ஒருச்லோகத்தாலும் கூறியிருக்கையாலே, அவ் விரண்டு மேற்கோள்களையும் எடுத்தாள விரும்பிய ஆசிரியர், ஆதியில் காருணிகனன ஸர்வேச்வரன் என்றதனுல் "மாநம் ப்ரதீபமிவ

காணிகோ ததாதி'' என்கிற பட்டர் ஸ்ரீஸூக்ருதியையும், முடிவில் நீர்மையினாலருள் செய்தான் என்றதனால் "கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தையும் தொகுத்தருளினார்.

பகவான் இப்படிப்பட்ட பேருதவி செய்தருளினது ஜ்ஞானஹீனர்களான மனிசர்களுக்காக வென்று கூற விரும்பிய ஆசிரியர் அதையும் தமது சொல்லால் சொல்லாது அறிவிலா மனிசர் என்றிட்டுச் சொன்னது 'அறிவிலா மனிசரெல்லாம்'' என்கிற திருமாலைப்பாசுரத்தை நினைப்பூட்டவே. மனிசர் அறிவில்லாதவர்கள் என்பதற்கு ஒரு மேற்கோள் காட்டவேண்டிய அவசியமில்லையானாலும், கூடுமான வரையில் பெரியார்களின் ஸ்ரீஸூக்திகளையிட்டே பணிக்கவேணுமென்று இவ்வாசிரி யரின் திருவுள்ளம்மென்பது இதனால் நன்கு விளங்கும், "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர்மொழியும் பொன்னே போல் போற்றுவம்'' என்ற நன்னூல் இங்கு நினைக்கத்தக்கது.

இங்கு ஒரு சிறிய சங்கை ஆராய்ச்சிப் புலவர்களுக்குத் தோன்றக் கூடியதுண்டு; அதாவது—முதலில் கருணிகனை என்றிட்டது " காருணிகோ ததாதி'' என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியைக் காட்டுதற்கேயன்றோ; அந்த பட்டர் ச்லோ கத்தில் விவேக்தும் ஈச: ததாதி '' என்றிருக்கிறதே யொழிய ஸர்வேச்வர: என் றில்லையே. ஆகவே, " காருணிகனை வீசன் '' என்று இவ்வாசிரியர் பணித்திருக்க வேண்டுமே; 'ஸர்வேச்வரன்' என்று வேறுசொல்லை யிட்டுப் பணித்தது ஏன்? என்பதாம் இந்த சங்கைக்குப் பரிஹாரம் வெகு நுட்பமான ஆராய்ச்சியினால் பெறவேண்டியிருக்கிறது. கேண்மின்; பகவான் சாஸ்த்ரங்களை யுதவினன் என்கிற விஷயத்தை பட்டர்போலவே திருமங்கையாழ்வாரும் கூறியுள்ளாரென்றும் அவ ருடைய பாசுரமும் இதே சூர்ணையில் தொகுக்கப்பட்டுள்ளதென்றும் கீழே தெரிவித் தோமல்லவா? அந்தப் பாசுரத்தில் " கலைகளும் வேதமும் நீதிநூலும் .... வான வர்க்கும் பிறர்க்கும் நீர்மையினா லருள்செய்து '' என்று, விண்ணுலகத்தாரோடு மண்ணுலகத்தாரோடு வாசியற ஸர்வ ஜனங்களுக்கும் அருள்செய்ததாகச் சொல்லி யிருப்பதைத் திருவுள்ளத்திற் கொண்டு அதையும் காட்டவேண்டி ஸர்வேச்வரன் என்றாரென்க. இப்படி நுட்பமாக ஆய்ந்து அறியவேண்டியவையும் இந்நூலில் பல வுள்ளன. (இடையில் தோன்றிய சங்கையும் பரிஹாரமும் நிற்க. இனி ப்ரக்ருத விஷயத்திற் செல்வோம்.)

இதற்குமேல், ஞான விளக்கையேற்றி என்று கூறநினைத்த ஆசிரியர் அதையும் தமது சொல்லாற் சொல்லாமல் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லு மிடத்து, அவ்விஷயத்திற்கு பூதத்தார் பாசுரமொன்றும், பேயார் பாசுரமென்றுமாக இரண்டு மேற்கோள்கள் காட்டத் திருவுள்ளம்பற்றி உணர்வென்னும் சுடர் விளக் கேற்றி என்ற சொல்தொடர் அமைத்திருப்பதானது மிகவற்புதம். இதனால் * உய்த்துணர் வென்னு மொளி கொள் விளக்கேற்றி வைத்து * என்கிற பேயார் பாசுரமும், * ஞானச்சுடர் விளக்கேற்றினேன் * என்கிற பூதத்தார் பாசுரமும் நன்கு காட்டப்பட்டன. "உணர்வென்னும் விளக்கேற்றி'' என்றோ ''ஞான விளக்கேற்றி'' என்றோ மூலமியற்றியிருந்தாலும் இங்கு ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றக் குறைவில்லை. ஆனாலும், மேற்கோள்களை அதிகமாகக் காட்டியருள வேணுமென்கிற விருப்பமே இப்படிச் சொல்தொடரமைக்கப் பண்ணிற்று,

இந்த ஸந்தர்பத்தில் மிக முக்கியமாக இங்குத் தெரிவிக்கவேண்டிய தொன்றுண்டு; இந் நூலைக் கண்டபாடஞ் செய்து தரித்தாலொழியப் பயனில்லை. அப்படிக் கண்டபாடம் செய்திருப்பவர் மிகச் சிலரே. அவர்களும் பலவிடங்களில் தவறுன-மிகத் தவறுன பாடங்களை அந்தபரம்பரையாக ஆதரித்துள்ளா ரென்பதைப் பற்றி இங்குச் சிறிது தெரிவிக்கிறோம் இப்போது நாமெடுத்து விவரித்த இவ்விடத் தில் "உணர் வெனும் சுடர்விளக்கேற்றி" என்றே பலரும் பாடம் செய்துள்ளார்கள். ஆசிரியர் எந்த ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியைக் கொண்டு இவ்வாக்கியம் இட்டருளி ஞரோ அந்த ஸ்ரீ ஸூக்தியில் "உணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்றுள்ளது. பெரிய திருமொழியில் (1-1-1) "உணர் வெனும் பெரும்பதம்" என்றுள்ளது. ஆனுல், அந்தப்பாசுரத்திற்கு இங்கு ப்ரஸக்திலேசமும் ல்லை. "உய்த் துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி" என்கிற பேயாழ்வாருடைய வெண்பாவே இங்கு விஷயமாதலாலும், அதில் தொகுத்தல் விகாரமில்லாமை யாலும், இல்லாத விகார மொன்றைப் புகுத்த யார்க்கும் அதிகார மில்லாமையாலும் "உணர் வென்னும் சுடர்விளக்கேற்றி" என்பதே சுத்தமான பாடம். அந்தபரம் பரையினுல் வந்த தவறுன பாடம் தவிர்க்கத் தக்கது-என்பது இங்கு ப்ராஸங்கிகமாக வுணர்த்தலாயிற்று.

பிறகு, நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று என்று ஆசிரியர் தாம் கூற விரும்பிய விஷயத்தையும் ஆழ்வார் பாசுரத்தாலேயே சொல்லப்புகுந்து, இதற்கும் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்களைக் காட்டவேண்டிப் "பிறங்கிருள் நீங்கி" என்ற சொல்தொடர் அமைத்தது பரம சாதுர்யம். இதில் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. * பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட * என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். * பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க * என்பது பெரியாழ்வார் பாசுரம் இவ்விரண்டு பாசுரங்களையும் சேரத் திரட்டியிருக்கு மழகு காண்மின். இங்கு மூலம் "பிறங்கிருள் நீங்கி" என்றுள்ளது. 'பிறங்கிருள்' என்பதனுல் திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'நீங்கி; என்பதனுல் பெரியாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'பிறங்கிருள் கெட' என்றுவது' 'பேரிருள் நீங்கி' என்றுவது மூலமியற்றி யிருந்தால் ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றுமல் போகாது, தோன்றியே தீரும்; ஆனுலும், இரண்டு மேற்கோள்கள் காட்டின சுவை தோன்றுதன்றே? பல மேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது மேற்பார்வையில் சிறிதும் தெரியாதபடி அமைத்திருப் பதும் ஒரு ஆச்சரியம்! இதுவே இந்நூலுக்கு ஒவ்வொரு சூர்ணையிலும் அஸாதாரணமான சிறப்பு என்றுணர்க.

இதற்குமேல் "எம்பெருமானுகிற விளக்கைக் கண்டு" என்று ஆசிரியர் சொல்ல நினைத்த விஷயத்தையும் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லுமிடத்து, எம்பெருமானை விளக்காகக் கூறுவது பெறியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய மூவருடைய பாசுரங்களினுலும் ஸித்திக்கின்றதென்று காட்ட வேண்டி "மேலிருந்த நந்தா வேத விளக்கை" என்ற சொல்தொடர் அமைத்தது வெகு அற்புதம். * வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்தவிளக்கு * என்றவர் பெரியாழ்வார். * நந்தாவிளக்கே * என்றவர் திருமங்கையாழ்வார். * மிக்கஞான மூர்த்தியாய வேதவிளக்கினைக் கண்டு * என்றவர் நம்மாழ்வார். இம் மூன்று மேற்கோள்களும் விளங்குமாறு "மேலிருந்த விளக்கை யென்றே, நந்தாவிளக்கை யென்றே, வேதவிளக்கை யென்றே, ஏதேனுமொரு விதமாகப் பேசியிருந்தாலும்

போதும்; ஆனால், மூன்று மேற்கோள்கள் காட்டினவழகு அப்போது விளங்கா தன்றோ? இதிலும்பலமேற்கோள்கள் காட்டப் பட்டன வென்பது தெரியாதபடியே சொல்தொடை அமைந்துள்ளது.

இதற்குமேல் நன்றுதீதுகளைப் பகுத்துணருகைக்காக வென்று தாம் சொல்ல நினைத்த விஷயத்தையும் இரண்டு மேற்கோள்களால் கூறவிரும்பிய ஆசிரியர் "நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்று சொல்தொடர் அமைத்தார். இதில் *இவையன்றே நல்லஇவையன்றே தீய* என்ற நம்மாழ்வார் பாசுரமும், *ஸதஸதீச விவேக்தும்* என்ற பட்டர் ச்லோகமும் கையாளப்பட்டிருப்பது காண்க. நல்லதும் தீயதுமறிகைக்கு என்றோ, ஸதஸத்துக்களை விவேகிக்கைக்கு என்றோ மூலமியற்றி யிருக்கலாம்; ஆனால், அப்போது ஒரு ப்ரமாணவசனமே மேற்கொண்டதாகும். அவ்வளவில் த்ருப்தியடைபவரல்லரே இவ்வாசிரியர்.

இதற்குமேல் "அகாரமாகிற விளக்கில்" என்று சொல்ல நினைத்த ஆசிரியர், அகாரத்தை விளக்காகக் கூறுவது திருமங்கையாழ்வாருடையவும் திருமழிசையாழ் வாருடையவும் பாசுரங்களினால் ஸித்திக்கின்றதென்று காட்டவேண்டி மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின என்று சொல்தொடர் அமைத்தார். *மிக்கானை மறையாய்விரிந்த விளக்கை* என்றருளிச் செய்தவர் திருமங்கையாழ்வார். *தோன்று சோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்கமாய்* என்றருளிச்செய்தவர் திருமழிசையாழ்வார்; இவ்விரண்டு மேற்கோள்களும் உணரலாம்படி "மறையாய் விரிந்ததுளக்கமில் விளக்கில் கொளுத்தின" என்று மூலமமைத்தது மற்றொருவருடைய சிந்தைக்கும் சோசரமன்று. மறையாய்விரிந்த விளக்கிலென்றோ, துளக்கமில் விளக்கி லென்றோ இயற்றியிருந்தாலும் குறையில்லை. ஆனால், அப்போது இச்சுவை காண முடியாததாகும்.

இந்த முதல் சூர்ணையில், ஞானத்தை ஒரு விளக்காகவும், எம்பெருமானை ஒரு விளக்காகவும் பேசிவந்தபடிக்கிணங்க, சாஸ்த்ரத்தையும் ஒரு விளக்காகப் பேசவேண்டி ப்ரதீபமானகலைகளை யென்று மூல மியற்றியுள்ளார். இதிலுள்ள, ப்ரதீபமான' என்கிற விசேஷணமானது பட்டர் ஸ்ரீஸூக்தியிலிருந்து கொள்ளப் பட்டது; (மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்றாரே அவர்.) அதற்குமேல் கலைகளை என்கிற விசேஷ்யமானது*கலைகளும் வேதமும் நீதிநூலும்** பன்னுகலை நால்வேதம்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரங்கலிருந்து கொண்டுகூறப்பட்டது.

இந்த சூர்ணையின் ஆரம்பத்தில் திருவுள்ளம் பற்றின *காருணிகோததாதி* என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்குச் சேர நீர்மையினாலருள் செய்தா னென்று திருமங்கை யாழ்வார் பாசுரத்தினால் முடித்ததானது மிகவும் ரஸிக்கத்தக்கது.

இன்னமும் பலவிசேஷங்கள் இதிலே உய்த்துணரவேண்டிய மருமங்களாக வுள்ளன; அவற்றையும் உணர்த்துகிறோம். "கண்ணன் பின்மாலையெழுந்து கோவிலை வலம்வந்து குளஞ்சென்று நீராடித் தாமரைப் பூப் பறித்துவர எண்ணங்கொண்டு இரவில் படுத்துக் கொண்டான்" என்று ஒருவர் சொன்னால், இந்த மஹாவாக் யத்தில் காணப்படுகிற எழுந்து, வலம்வந்து, சென்று, நீராடி, பறித்து என்ற வினை யெச்சங்கள் இறந்தகால வினையெச்சங்களாக இருந்தாலும் எதிர்காலப் பொருள்

படுமேயன்றி இறந்தகாலப்பொருள் படுவதில்லை யென்பதுதெளிவு. பின்மாலை யெழுந்திருக்கவும் கோவில்வலம் வரவும், குளம் செல்லவும், அங்கு நீராடவும், தாமரைப்பூப் பறிக்கவும் (திரும்பிவரவும்) எண்ணங்கொண்டு படுத்துக்கொண்டதாகவே சொல்ல வேண்டியுள்ளது. இவ்விதமாகப் பொருள்கொள்ளவேண்டிய பிரமேயம் இத் திவ்விய நூலில் மிகவுண்டு. இதையும் இந்த முதல் சூர்ணையிலேயே காணலாம். இதில் விளக்கேற்றி, இருள்நீங்கி, விளக்கைக்கண்டு என்கிற இறந்தகால வினையெச்சங்கள் எதிர்காலப் பொருளிலேயே பிரயோகிக்கப்பட்டன. விவேகிக்கைக்கு என்று மேலுள்ள ஸ்ரீஸூக்திக்குச் சேருமிது. விளக்கேற்றுகைக்காகவும் அதனால் இருள் நீங்கப் பெறுதற்காகவும், பின் எம்பெருமானாகிற விளக்கைக் காண்கைக்காகவும் நல்லதும்,தீயதும் விவேகிக்கைக்காகவும், கலைகளையருள் செய்தானென்பதாக இங்கு விவக்ஷிதமென்று உணரவேணும்.

மற்றொரு விஷயமும் குறிக்கொள்க. அதாவது, திவ்விய ப்ரபந்தப் பாசுரங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் அருளிச்செய்த வியாக்கியானங்களில் காணாத சில அர்த்த விசேஷங்களும் இவ்வாசிரியர் திருவுள்ளம் பற்றுவதுண்டு. நிர்வாஹ பேதங்கள் என்கிற முறையிலே இது தீதற்றதே யாகும். இப்படி இவ்வாசிரியர் கொண்டதோர் அர்த்த விசேஷமும் இந்த முதல்சூர்ணையிலேயே காணக் கிடக்கின்றது. *மறையாய் விரிந்த விளக்கை* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் காணாதபொருள் இவர் கொண்டது. எம்பெருமான்றன்னையே ஸாக்ஷாத்தாய் மறையாய் விரிந்த விளக்கென்று ஆழ்வார் கூறினதாகப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் காட்டுகின்றது. இவ்வாசிரியரோ வென்னில் ஸகலவாக்குக்களுக்கும் வித்தான அகாரத்தை மறையாய் விரிந்த விளக்கென்று சொன்னதாகக்கொண்டு அந்த அகாரத்திற்கும் எம்பெருமான் பொருளாயிருப்பவனென்கிற காரணத்தனால் [அந்த ஸாமாநாதி கரண்ய நிதாநத்தினால்] ஆழ்வார் பாசுரத்தில் எம்பெருமான் பொருள் படுகிறானென்று திருவுள்ளம்பற்றி இந்த சூர்ணையில் அகார பரமாகவே அந்தப் பாசுரத்தை மேற்கொண்டருளினார். இப்படிப்பட்ட நிர்வாஹ பேதம் இந்நூலில் ஐந்தாறிடங்களில் வருவதுண்டு. மேலே "பண்ணார் பாடல் பண்புரை யிசைகொள் வேதம்போலே" (50) என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்தியுங்காண்க.

மற்றுமொரு பரம ஆச்சரியமான விஷயமும் இந்த திவ்யக்ரந்த அமைப்பில் பொலிந்துள்ளது. அதாவது!, பலபல பாசுரங்களை இவ்வாசிரியர் மேற்கோளாக எடுத்தாளச் செய்தேயும் அவை இவருடைய ஸொந்தவாக்யம்போல் வரிசையாக அந்வயம் பெற்று விளங்கா நிற்கும். மற்றை நூல்களில் மேற்கோள்களைக் காட்டினால் "என்கிறபடியே" என்றும், "என்றும்" என்றும் இடையிடையே காணப்படும். அவை ப்ரமாணவசனங்களென்று தனிப்பட்டு நிற்குமேயொழிய நூலாசிரியருடைய வாக்ய சைலியாகவே பொருந்திப் பொருள்படமாட்டா. ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி, ரஹஸ்யத்ரயஸாரம் முதலிய ஸகல க்ரந்தங்களும் அவ்வகையிலேயே அமைந்துள. இந் நூலில் அப்படி மேற்கோளெடுத்துக் காட்டுவதாகத் தாமே கூறுகிற விடங்கள் மிகச்சில: "மறந்தேனறியகிலாதே உணர்விலேனேனிலேனயர்த்தென்றும்" "கடன்ஞாலம் மின்னிடை மல்லிகை.... வாயுந்தீர்ப்பா ரென்னுமவற்றிலே தோன்றும்" என்பவை முதலிய சில சூர்ணைகளில் மாத்திரமே மேற்கோளான ப்ரமாணவசனங்கள் தமது வார்த்தையாக அமைந்து பொருள்படாமல் "என்று"

''என்றவை'' ''என்கிற'' இத்யாதி பதங்களைச் சேர்த்துத் தனியந்வயமாகக் காட்டப்
பட்டிருக்கும். பெரும்பாலும் அப்படியல்லாமல் 'பிரமாணவசனங்களான மேற்கோ
ளிவை'' என்று பிறரால் தெரிந்துகொள்ள முடியாமலும், அப்படி எடுத்தாளப்படுகிற
அவையும் வரிசையாய் மிகப்பொருத்தமான அந்வயம் பெறும்படியாகவும் தொடுக்கப்
பெறுவது இவ்வாசிரியரொருவர்க்கே சிறப்பாகவும் அற்புதமாகவும் அமைந்த நடை'
இந்நூலில் இந்த நடையொன்றே மாஞானிகளின் நெஞ்சையுளுக்கக் கூடியது,
இவ்விஷயத்தையும் மேலே நாமெடுத்து விவரித்த முதல் சூர்ணையிலேயே காணலாம்
''உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி'' ''பிறங்கிருள் நீங்கி'' ''மேலிருந்த நந்தா
வேதவிளக்கை'' ''மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில்'' என்னுமிந்த வாக்கி
யங்களில் ஒவ்வொன்றிலும் பல மேற்கோள்கள் புகுந்திருக்கவும் ''என்கிறபடியே''
என்னவேண்டிய அவகாசமேயில்லாமல் இவருடைய ஸொந்த வாக்குப்போலவே
ஒன்றோடொன்று இணங்கி வரிசையாக ஒரு நீராய்ப் பொருள் பட்டிருக்குமழகு
ஒவ்வோரிடத்திலும் ஆழ்ந்து ஆராய்ந்து உணரவேண்டிய மஹத்தான அதிசயம்.
பலபல மேற்கோள்களையும் தமது வார்த்தையாகவே ஆக்கி அடைவே அந்வயம்
பெறத் தொடுப்பதென்பது தனிப்பட்டதொரு சக்தி விசேஷமன்றோ.!

இங்ஙனே எடுத்து நிரூபிக்கவேண்டிய அதிசயங்கள் இந்நூலில் அளவற்றவை. ஒப்புயர்வற்ற சாதுர்யமும் ஈடுமெடுப்புமில்லாத பாண்டித்யமும் மிக விளங்க அமைந்தது இவ்வுலகின்கண் இந்நூல் ஒன்றே யென்று எத்தனை தடவை கூறினாலும் மிகையாகாது.



# ஓர் விலக்ஷண கைங்கர்யம்

(பத்ராதிபர்)

காஞ்சிமா நகரில் அட்டபுயகரத் தெம்பெருமான் ஸன்னிதிக்கும் விளக்கொளி
யெம்பெருமான் ஸன்னிதிக்குமிடையில் வேளுக்கை என்கிற திவ்ய தேசம் மிகவும்
ப்ரஸித்தமானது. ''வேளுக்கையாளரியை'' என்று ஆழ்வார் பாடல். ''காமாஸிகா''
என்பது வடமொழித் திருநாமம் இந்த திவ்ய தேசம் சிலபல வருஷங்களாய்க்
கேட்பாரற்றிருந்தது, இப்போது சென்னை அட்வகேட் ஸ்ரீமதுபயவே P. B அனந்தா
சார்ய ஸ்வாமியின் ப்ரபலமான முயற்சியினுல் ஜீர்ணோத்தாரணம் தொடங்கப்பட்டு
நேற்று ஜூன் மாதத்தில் (தயார் ஸன்னிதி) பாலாலய மஹோத்ஸவம் மேற்படி
ஸ்வாமியால் வெகு விமர்சையாக நடத்தப்பட்டது. மேற்கொண்டு திருப்பணி
வேகமாக நடைபெற்று வருகிறது. இந்த ஸ்வாமியின் திருப்பணியாக தயார்
ஸன்னிதி ஜீர்ணோத்தாரணம் நடைபெற்று வருகிறது. நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

8 *பொலிந்த முகிற்கன்று போலே.*

பெரியாழ்வார் திருமொழியில் 2-7-4. 'தெருவின்கண்ணின்று' என்னும் பாசுரத்தில், கண்ணபிரானுடைய வடிவழகுக்கு ஏற்ற உவமை' யில்லாமையினால் அபூதோபமை [இல்பொருளுவமை] கூறப்படுகின்றது. 'புருவங்கருங்குழல்நெற்றி பொலிந்த முகிற்கன்றுபோலே உருவமழகியநம்பி என்கிறது. புருவங்களையும் கருநிறமான குழலினையும் இவ்விரண்டிற்கும் இடையே நெற்றியையுங்கொண்ட ஒரு மேகக்குட்டியுண்டானால் அதனை உவமை கூறலாமென்றவாறு. ... ... ... (8)

9 *புண்ணிற் புளிப்பெய்தாலொக்குந்தீமை.*

பெரியாழ்வார் திருமொழி 2-9-1. 'வெண்ணெய் விழுங்கி பாசுரத்தில் கண்ணன் தீம்புகள் செய்யும்படிக்கு உவமை கூறப்படுகின்றது. —'புண்ணில் புளிப்பெய்தாலொக்குந்தீமை புரை புரையாலிவை செய்ய வல்ல......மகனைப்பெற்ற அசோதை நங்காய்!உன் மகனைக் கூவாய்' என்று. புண்ணிலே புளிச்சாற்றை வார்த்தால் பொறுக்க முடியாதென்பது ப்ரஸித்தம். இதே உபமானத்தை ஆண்டாளும் தனது திருமொழியில் (13-1.) 'புண்ணில் புளிப்பெய்தாற்போலப் புறநின்றழகு பேசாதே' என்பதனாற் கூறுகின்றமை காண்க. ஆனால் அது கண்ணபிரானுடைய தீம்புக்கு இட்ட உவமையன்று. ... ... (9)

10. *செய்த்தலையெழுநாற்றுப்போல்.*

பெரியாழ்வார் திருமொழி (3-7-9.) 'செய்த்தலையெழுநாற்றுப் போல் அவன் செய்வன செய்துகொள்ள, மைத்தடமுகில் வண்ணன் பக்கல் வளரவிடுமின்களே' என்பது ஸாமான்யமான மொழியன்று ஜீவாத்மஸ்வரூபத்தை வடிகட்டியுணர்த்தும் வார்த்தையது. முமுக்ஷுப் படியில் திருமந்திரத்தில் நமஸ்ஸின் பொருள் நமது நெஞ்சில் நன்கு பதியும்படியாக அற்புதமான நிரூபணம் செய்தருளும் பிள்ளைலோகாசாரியர் நம: பதார்த்தத்தைநாமுணர்வதற்கு முன்னே நமக்கிருந்த நினைவையும்; பின்னே யுண்டாகக் கூடிய திடமான நினைவையும் வகையிட்டுக் காட்டியரு ளுமிடத்து "ஈச்வரன் தனக்கேயாயிருக்கும், அசித்துபிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்குமென்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போல தனக்கேயாக எனைக்கொள்ள

வேணுமென்கிறது நமஸ்ஸால்.'' என்றுள்ள ஸ்ரீஸூக்தி மிக விலையுயர்ந்தது. அசேதனத்திற்கும் சேதநனுக்கும் வாசியற்றிருக்க வேணுமென்று சிக்ஷிப்பது ஸம்ப்ரதாயத்தில் ஸாரதமமான விஷயம். இங்கு 'செய்த்தலை எழுநாற்றுப் போல்' என்கிற த்ருஷ்டாந்தமானது அந்தச் சீரிய பொருளேயே நிலை நாட்டி நிற்கும். **செய்** — வயல்; **செய்த்தலை** — வயலிலே யென்றபடி, கழனியில் என்கை. உழவன் தன்னிலத்திலுள்ள நாற்றைத் தன் கருத்துக் கொத்தபடி தான் விநியோகப்படுத்திக் கொள்வதை நாம் காண்கின்றோம். அதுபோல சேதநன் பரமசேதனனுடைய இஷ்ட விநியோகத்திற்கு உரியனுகி அத்யந்த பாரதந்த்ரிய ஸ்வரூபத்தைப் பேணியிருக்கக் கடவனென்றதாயிற்று. இந்த உவமை மற்றவற்றைப் போலன்றிக்கே மர்ம ஸ்பர்சியானதென்று கொளக்கடவது. ... ... (10)

## 11. பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்.

பெரியாழ்வார் திருமொழி 5-4-7. 'பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி போல், திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்' என்ற விதில்—எம்பெருமான் ஆழ்வார் திருமுடியின் மீது திருவடிகளைக் கொண்டு நாட்டியருளினதற்கு ஒரு அபூர்வமான உபமானம் காட்டியருளினர். இவ்வாழ்வாருடைய சரிதையிலும் தனியனிலும் பாண்டிநாட்டரசன் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருப்பது கொண்டு அவ்வரசனுக்கு ஆழ்வாரிடத்திலுள்ள மதிப்பும், ஆழ்வார்க்கு அவ்வரசனிடத்துள்ள அன்பும், அறியக் கிடக்கின்றது. பரம ஆஸ்திகனும் ஸ்ரீ மஹாவிஷ்ணு பக்த சிகாமணியுமான அவ்வரசனது புகழைத் தம்முடைய அருளிச்செயலிலும் ஏற்றிவைக்க வேணுமென்று திருவுள்ளங் கொண்ட ஆழ்வார் கீழே (4-2-7.) 'கொன்னவில் கூர்வேல் கோன் நெடுமாறன் தென்கூடல் கோன்தென்னன் கொண்டாடுந் தென் திருமாலிருஞ் சோலையே என்ற பாசுரத்தினல் அவ்வரசன் திருமாலிருஞ்சோலை மலையிலீடுபட்டிருந்தபடியை அருளிச்செய்துள்ளார்.அவ்விதிஹாஸத்தைக் கூரத்தாழ்வானும் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் 'இதமிமே ச்ருணுமோ மலயத்வஜம் ந்ருபமிஹ ஸ்வயமேவ ஹி ஸுந்தர!,சரனஸாத்க்ருதவாநிதி' என்றுபொறித்து வைத்தருளினர். 'பருப்பதத்துக்கயல் பொறித்து வென்னுமிப்பாசுரத்தில் கூறப்படும் இதிஹாஸமாவது — பாண்டிய குலத்தலைவனுயிருந்த மலயத்வஜராஜன் தனது நாட்டில் நின்றும் மஹாமேருகிரியளவும்

வழியிலுள்ள காடுகளைக் களைந்து பகைவர்களைப் பாற்றித் தனக்கும் தனது பரிஜனங்களுக்கும் நடை எளிதாம்படி பெருவழியாக்கிக்கொண்டு சென்று தனது வெற்றி தோற்றும்படி அம்மேருமலையின் சிகரத்தில் தனது மகர கேதுவை நாட்டிப் போயினனென்பதாம்.பரம பதத்தை இருப்பிட-மாகவுடைய எம்பெருமான் அங்கு நின்றும் இவ்வாழ்வார் பக்கலிலே வரும-ளவு முண்டான பாவக்காடுகளைப் பாழாக்கியும் விரோதிகளைப் போக்-கியும் இவருடைய சென்னித்திடரில் பாதவிலச்சினை வைத்ததற்கு ! இது ஏற்ற த்ருஷ்டாந்தம். பர்வதமென்ற வடசொல் பருப்பத மென்றாயிற்று. கயல்பொறித்த வென்றது. மீன் வடிவமான தனது கேதுவை நாட்டின என்றபடி. ... ... (11)

## 12. *சீரிய சிங்கம்.........போதருமாபோலே.*

திருப்பாவையில் (23.) மாரிமலை முழஞ்சில் பாசுரத்தில்—கண்ணபிரான் திருப்பள்ளியறையில் நின்றும் துயிலுணர்ந்தெழுந்து சீரிய சிங்கா, சனத்தளவும் புறப்பாடு கண்டருள்வதற்கு ஒரு பொருத்தமான த்ருஷ்டாந்தம் காட்டப்படுகின்றது. ஸ்ரீராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகன்அந்தப்புரத்தில் நின்றும்புறப்பட்டெழுந்தருளினமைக்கு *பர்வதாதிவ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கிரிகுஹாசய;* என்று வான்மீகிமுனிவர் கூறின த்ருஷ்டாந்தமே இங்குக் கூறப்பட்டதென்க. ... (12)

## 3. *மறையவர் வேள்வியில் வகுத்த அவி-நரி புகுந்து கடப்பதும் மோப்பதுஞ் செய்வதொப்ப.*

நாச்சியார் திருமொழி (1-5) கண்ணபிரானுடைய போகத்திற்காகவே கிளர்ந்தெழுந்ததனது கொங்கைகள் மானிடர்கட்கு உரியனவாக வாய்ப்பேச்சு நிகழ்ந்தாலும் அது தனக்கு அஸஹ்யமாவதோடு ஸ்வரூபஹாநியுமாகுமென்று அருளிச்செய்யாநின்ற ஆண்டாள் இதற்குஏற்றதோர் உவமை கூறுகின்றாள் வானிடை வாழுமவ்வவானர்க்கு மறையவர் வேள்வி-யில்வகுத்தவவி.கானிடைத் திரிவதோர் நரிபுகுவந்துகடப்பதும்மோப்பதும் செய்வதொப்ப என்று.இவ்வுலகில் அந்தணர்கள் நிகழ்த்தும் யாகங்களில் "இந்த்ராய ஸ்வாஹா ஸூர்யாய ஸ்வாஹா" என்று இத்யாதிகள் சொல்லி தேவர்கட்குவகுக்கும்புரோடாசத்தை மிகவும் அற்ப ஜந்துவாகிய

ஒரு காட்டு நரி கிட்டிக் காலால் கடந்தும் மூக்கால் மோந்தும் நஷ்ட-மாக்குவதுபோல—என்றபடி. இதனைப் பிள்ளை லோகாசாரியரும் முமுக்ஷுப்படியில் "தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோல ஈச்வரசேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை" என்பதனாலருளிச்செய்தார். ... ... ... (13)

## 14. *உழுவதோரெருத்தினை நுகங்கொடுபாய்ந்து ஊட்டமின்றித் துரந்தாலொக்குமே.*

நாச்சியார் திருமொழியில் (1-9.) *தொழுது முப்போது முன்னடி வணங்கி பாசுரத்தில்-காமதேவனே! கண்ணபிரானையே நான் கணவனாகப் பெறுதற்குறுப்பாக உன்னை நோக்கிச் செய்யும் வழிபாடு விபலமாகக் கூடாது; விபலமாகுமானால் அஃது உனக்கு நிறக் கேடாகும்; ஓர் உழவன் தனது ஜீவனத்திற்காக எருதினிடத்துப் பரிபூர்ணமாக வேலைகளை வாங்கிக் கொண்டு பின்பு அதற்கு உணவிடாமல் நுகத்தடியால் அடித்துத்தள்ளி-யோட்டினால் என்ன பாவம் நேருமோ அது உனக்கு நேருமென்றவாறு. ... ... ... (14)

## 15. *கட்டியும் கைத்தாலின்னாமையறிதியே*

நாச்சியார் திருமொழி இரண்டாம் பதிகத்தில் திருவாய்ப்பாடி யாய்ச்சிகள் கண்ணபிரான் மீது ப்ரணய ரோஷத்தினால் அந்யபரதை பாவித்துச் சிற்றிலிழைக்கவொருப்பட்டிருக்கையில் கண்ணபிரான் அங்குச் சென்று அச்சிற்றிலையழித்துச் சில ச்ருங்கார சேஷ்டிதங்கள் செய்கையில் ஆய்ச்சிகள் தங்களுடைய வெறுப்பைக் காட்டிச் சில பேசு-கிறார்கள். கண்ணன் பலாத்காரமாக ஆய்ச்சிகளைத் தீண்ட வந்தான்; அப்போது 'ஹரி! ஹரி!; நீ எத்தனை பெண்டுகளைத் தீண்டிவந்தாயோ தெரியாது; எங்களைத் தீண்டாதே கடக்க நில்' என்று வெறுப்புத் தோன்றச் சொன்னார்கள் ஆய்ச்சிகள். அப்போது கண்ணன் திடுக்கிட்டு 'ஆய்ச்சிகளே! தேனும் பாலும் நெய்யுங்கன்னலுமமுதுமாக என்னைச் சொல்லி ரஸித்திருந்த நீங்கள் இப்போது இப்படிச் சொல்லலாமா? யாரென்று நினைத்தீர்கள்? என்று சொல்லிச் சங்குசக்கரமேந்தின மேந்தின கோலத்தைக் காட்டிப் புன்முறுவல் செய்து நிற்க, அப்போது கோபிகள் சொல்லுகின்றனர், "சுடர் சக்கரங்கையிலேந்தினாய்! கட்டியும்

னைத்தால் இன்னுமை யறிதியே கடல் வண்ணனே!" என்று. இங்கு உவமைக்குறி இல்லையாயினும் உபமான வார்த்தையே யாகுமிது. 'நாக்கு கசத்துப்போனல் கருப்பஞ்சாறும் கைக்கும்' என்பது உலக வழக்கு. அதை இங்கு உவமையாகக் காட்டுகிறபடி. இப்போது எங்கள் நெஞ்சு உன் மீது வெறுப்புக் கொண்டிருப்பதனுல் உன்னுடைய போக்யதை எங்கள் நெஞ்சில் படவில்லை யென்றவாறு. ... ... (15)

## 16. *விடத்தேளெறிந்தாலேபோல வேதனையாற்றவும் பட்டோம்.*

திருவாய்ப்பாடியில் உள்ள கோபிகள் க்ருஷ்ண விரஹதாபம் தீரச் சுனையாடல் செய்யவேண்டி அவனறியாததொரு பொய்கை தேடிச் சென்று, இடைப்பெண்களாகையாலே ஆடைகளையும் ஆபரணங்களையும் களைந்து கரையில் வைத்திட்டு நீரிலே குடைந்தாடா நின்றூர்கள். கண்ண பிரானும் இவர்களுடைய பிரிவையாற்றமாட்டாதே *இருளன்னமாமேனி யனுனதான் இவர்களுடைய நிழலிலேயேயொதுங்கி அப்பொய்கைக்கே வந்து சேர்ந்து கோபிகள் கரையிலே களைந்துவைத்திருந்த ஆடையாபர ணங்களையெடுத்துக்கொண்டு தன் தலையிலும் தோளிலும் தாளிலுமணிந்-துகொண்டு குழலூதாநிற்க, இவன் நம்மடிபிடித்துவந்தான், நாமும் இவனை மடிபிடித்து வாங்கிஞேமாகவேணும்' என்றெண்ணின கோபிகள் இவனை இரப்பார் ஏத்துவார் வாழ்த்துவார் தாழ்த்துவார் சீறுவாராய் தாங்கள் நீரிலே நின்று வருந்தும்படியை விரிவாக எடுத்துரைக்கையில் தடத்தவிழ் தாமரைப் பொய்கைத் தாள்கள் எங்காலைக் கதுவ, விடத்-தளெறிந்தாலேபோல வேதனையாற்றவும்பட்டோம்* என்கிறூர்கள் தாங்கள் படும் வேதனைக்கு விஷம்மிக்க தேள் கொட்டிப் படும் வேத னையை ஒப்புச் சொல்லுகிறூர்களாயிற்று. ... ... ... (16)

## 17. *நாளுமுயிர்ப்பெய்து கூத்தாட்டுக்காணும்.*

நாய்ச்சியார் திருமொழி 5-2. *வெள்ளை விளிசங்கிடக்கையிற் கொண்ட விமலனெனக் குருக்காட்டான், உள்ளம் புகுந்தென்னை நைவித்து நாளுமுயிர்ப்பெய்து கூத்தாட்டுக்காணும்* என்றவிடத்து உபமானமுரைத்தல் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் உபமான கர்ப்பமாக வே இது கூறப்படுகின்றது. ,,என்னை நைவித்து நாளுமுயிர்ப்பெய்து என்றவிடத்து உறைந்துகிடக்கும் உவமையைக் கேளீர். முற்காலத்தில்

ராஜதண்டனைக் குட்படும் குற்றவாளர்கள் முக்கோணங்கட்டி முப்பது அடியடிக்கக் கட்டளையிடப் பெறுவர்கள். சேவகர்கள் அப்படியே கட்டியடிப்பார்கள். பத்தடிபட்டவாறே உயிர் துறக்குந் தருணமாகும். அப்போது அடிப்பதை நிறுத்தி அவனுக்கு மோர்க்குழம்பு கொடுத்துத் தேற்றிச் சிறிது ஸுதாரித்தவாறே மீண்டும் கட்டியடிப்பர்கள். மீண்டும் உயிர்போகுந் தருணமானவாறே பழையபடியே தேற்றியடிப்பர்கள். முடியப்போகு முயிரை இடையிடையே போகாமல் காப்பது மேன்மேலும் நலிவதற்காக— என்பது இதனால் அறியப்படும். இதுபோலவே கண்ண பிரானும் போகின்ற என்னுயிரைப் போகாமல் தடுக்க இடையிடையே சூதுசெய்து உயிரைக்கொடுத்து நலிகின்றானென்கிறாளாண்டாள்.

... ... ... ... (17)

## 18 *மென்னடையன்னம் பரந்துவிளையாடும் வில்லிபுத்தூர்.*

நாச்சியார் திருமொழி (5-5) *மென்னடையன்னம் பாசுரத்திலும் உவமைக்குறி சிறிதுமில்லையாகிலும் முன்னடிகளிலும் பின்னடிகளிலும் இரண்டு விஷயங்கள் ஆலங்காரிக ஸமயத்தின்படி தோற்றுவிக்கப்படுகின்றன. (1.) முன்னடியில் ஸ்ரீவில்லி புத்தூரைப்பற்றின வர்ணனையுள்ளது. அங்கு மென்னடையன்னம் பரந்து விளையாடுவதாகச் சொல்லப்படுகிறது. பெரியாழ்வார் தமது திருமொழியில் *மின்னனைய நுண்ணிடையார் விரி குழல்மேல் நுழைந்தவண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்* என்ற பாசுரத்தினால் ஆண்டாளுடைய சரிதையொன்றை ஸூசிப்பித்ததுபோல இங்கு ஆண்டாள் மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர் என்பதால் பெரியாழ்வார் பெருமையை ஸூசிப்பிக்கின்றாள். ஆசார்ய ஹ்ருதயத்தில் ஹம்ஸத்திற்கு ஸ்வாபதேசமருளிச்செய்யுமிடத்து "விவேக முகராய் நாலுரைத்து......என்று தொடங்கி "நயாசலன் மெய்ந்நாவன் நாதயாமுனர் போல் வாரை அன்னமென்னும்" எனப்பட்டது. இதில் நயாசலன் என்றது—*நளிர்ந்த சீலன் நயாசலன்* என்று ஆழ்வார் தாமே புகழ்ந்த செல்வ நம்பியை., மெய்ந்நாவன் என்றது *மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன்* எனப்பட்ட பெரியாழ்வாரை.எம்பெருமான் ஹம்ஸாவதாரமெடுத்து மறைபயந்தாப்போலே* ப்ராஹ வேதாந் அசேஷாந் என்றும்* வேண்டிய வேதங்களோதிவிரைந்து கிழியறுத்தான்என்றும் சொல்லுகிறபடியே வேதப்பொருளை விரித்துரைத்த இவரும் ஹம்ஸமென்னத் தகுதியுடையவர் (விளையாடும்)க்ரீடார்த்தமபி யத்ப்ரூயுஸ்ஸ தர்ம:

பரமோ மத :* என்கிறபடியே விளையாட்டாகவே பரம தர்மங்களை வெளியிட்டபடியைச் சொன்னவாறு. இப்படிப்பட்ட பரமஹம்ஸ மஹநீயர் அவதரித்தவிடம் வில்லிபுத்தூரென்றதாயிற்று. (2)பின்னடிகளில் குயிலே! என்று குயிலை விளித்து *என் கோலக்கிளியை உன்னொடு தோழமைக் கொள்ளுவன்* என்று சொல்லியிருப்பதை ஆழ்ந்து நோக்கவேணும். குயிலுக்கும் கிளிக்கும் நட்புகொள்விப்பதாகக் கூறுவதன் கருத்து ஆராயப் பட வேண்டும்.

குயிலென்றது—வால்மீகி மஹர்ஷியை: கிளியென்றது சுகமஹர்ஷியை *கூஜந்தம் ராம ராமேதி—* என்னும் வான்மீகி தனியனில் *வந்தே வால்மீகி கோகிலம்* என்றுஅவர் குயிலாகச் சொல்லப் பட்டிருக்கிருர். சுகமஹர்ஷியின் பெயரே அவரைக் கிளியென்று காட்டுகிறது. வால்மீகி முனிவர் ராமகதாரஸிகர்; சுகர் க்ருஷ்ண கதாரஸிகர்; இவ்விருவர்க்கும் தோழமை கொள்விப்பதாவது ராமன் கதையையும் க்ருஷ்ணன் கதையையும் ஒருங்கேயுகக்கும்படி செய்வதாம். ஆண்டாள் கண்ணனை விரித்து அவன் கதையையும் சொல்லுவள், ராமன் கதையையும் சொல்லுவள். *குதிகொண்டரவில் நடித்தாய்* என்றதுபோலே *வில்லாலிலங்கையழித்தாய் *என்றும் சொல்லுவள். தென்னிலங்கை செற்ருய்! திறல் போற்றி*என்றதும்; *பொன்றச்சகடமுதைத்தாய் புகழ்போற்றி* என்பள். *புள்ளின்வாய் கீண்டானை*என்றதும் பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை* என்பள். இங்ஙனே தான் கொண்ட ஒற்றுமை நயத்தையே குயில் கிளிகளுக்கு ஆக்குவித்த நட்பாக நவின்ருளாயிற்று இங்கு அந்தர்க்கதோபமையென்று கொள்க. — (18)

## 19 *செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்.

நாச்சியார் திருமொழியில் (7-7) வாசுதேவனுடைய அங்கைத்தலமேறி அன்ன வசஞ்செய்யும் சங்கரையனுக்கு – செங்கமலநாண்மலர்மேலுறையுமன்னம் உவமையாகக் கூறப்பட்டது. கண்ணபிரானுடைய செவ்விய திருக்கைத்தலத்திற்குச் செந்தாமரைமலரும்' அக்கையிலுள்ள வெண்ணிறமான சங்குக்கு வெண்மையான ஹம்ஸமும் உபமானமாகக் கூறப்பட்டது. இதில் பரபாக சோபாநுபவமுமுள்ளது கூரத்தாழ்வான் ஸுந்தரபாஸுஸ்தவத்தில்*ஸ்ரீமத்வநாத்ரிபதிபாணிதலாப்ஜயுக்ம* என்கிறச்லோகத்தில் ,, விமலசங்க.- அப்ஜமாச்ரித இவோத்தமராஜஹம்ஸ:, என்றருளிச்செய்ததுஇப்பா சுரத்தைத் தழுவியே. ... ... ... — (19)

## 20. மாலிருஞ்சோலையில் கொன்றைகள்மேல் தூங்கு பொன்மாலைகளோடுடனாய் நின்று தூங்குகின்றேன்

நாச்சியார் திருமொழி-9.9. *கோங்கலரும்பொழில்* என்கிற பாசுரத்தில் முன்னடிகளின் கருத்து மிகவும் ஆழ்ந்தது' ஆண்டாள் தன்னுடைய நிலைமைக்குத் திருமாலிருஞ்சோலையில் கொன்றைமரங்களில் புஷ்பித்த புஷ்பங்களினுடைய நிலைமையை ஒப்புச் சொல்லுகின்ருள் இதற்கும் அதற்கும் எங்ஙனே ஸாம்யமெனில் கேண்மின். திருமாலிருஞ்சோலைமலையில் ஸாத்விகபுருஷர்கள் ஏறிப் போவர்களோ

யன்றி ராஜஸதாமஸ புருஷர்கள் ஏறிப்போகமாட்டார்கள். கொன்றைமலர்கள் சிவன் முதலிய தேவதாந்தரங்களின் ஆராதனைக்கு மட்டும் உபயோகப்படக்கூடியவை யாதலால் அவை ராஜஸ தாமஸ புருஷர்களுக்கே உபாதேயமாகின்றபடியால் ஸாத்விக புருஷர்களுக்கு அவைகொண்டு காரியமில்லை. ஆக ராஜஸ தாமஸ புருஷர்கள் புகுமிடமல்லாத திருமாலிருஞ்சோலைமலையில் மலர்கின்ற கொன்றைகள் பறிப்பாரில்லாமல் அங்கே மலர்ந்து அங்கே உதிர்ந்துபோவ தொழிய வேறொருபயோகமும் அவற்றுக்கில்லையாயிற்று ஆகையினாலே அந்த மலரினுடைய ஜன்மம் எப்படி வீணோ அப்படியே என் ஜன்மமும் வீணாயிற்றே யென்கிறாளாண்டாள். உபயோகமற்ற தன்மையில் ஸாம்யம் விவக்ஷிதமென்க. திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் "கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின், நன்னறுவாசம் மற்றாரானுமெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல்என்னுடையபெண்மையும் என்னலனுமென் முலையும்,மன்னுமலர்மங்கைமைந்தன் கணபுரத்துப்பொன் மலைபோல் நின்றவன்தன் பொன்னகலம் தோயாவேல் என்னிவைதான் வாளாவெனக்கே பொறையாகி" என்றருளிச் செய்ததும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. ... ... (20)

(21) பெருமாள் திருமொழியில் ஐந்தாவது திருமொழியாகிய *தரு துயரம் தடாயேல் பதிகத்தில் நிகமனப்பாசுரமொன்று நீங்கலாக மற்றை யொன்பது பாசுரங்களிலும் ஆழ்வார் தம்முடை அநந்யகதித்வத்திற்கு ஒவ்வோருபமானமநுஸந்திக்கிறார் [*அரிசினத்தாலீன்றதாய் அகற்றிடினும் ] மற்று அவள்தனருள் நினைந்தேயழுங்குழவியதுவே போன்றிருந்தேனே * தாயானவள் குழந்தையின்மீது கடுங்கோபங்கொண்டு அதை அடித்து உதைத்துத் தள்ளினாலும் அக்குழந்தையானது தாயொழிய வேறுபுகலில்லை யென்றறிந்து பின்னையும் அவளுடைய காலையே கட்டிக்கொண்டு அழுவது போல என்கிற உபமானம் இங்குக் கூறப்பட்டது. தமக்கு எம்பெருமான் துக்கங்களைப் போக்காமல் மேன்மேலும் வளரச்செய்தாலும் அவனது திருவடியொழியத் தஞ்சமில்லையென்பதற்கு இது ஏற்ற உவமை. ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் *நிராஸகஸ்யாபி நதாவதுத் ஸஹே மஹேச! ஹாதும் தவ பாதபங்கஜம் ருஷா நிரஸ்தோபி சிசுஸ் ஸ்தநந்தயோ நஜாது மாதுச் சரணௌ ஜிஹாஸதி* என்கிற சுலோகத்தை இந்தப்பாசுரத்திற்கு ப்ரதிச் சந்தமாகவேயருளிச் செய்தார் ... (21)